**Tamil Literature for Schools and Colleges.**

# இராஜபக்தி

ஆங்கில துரைத்தனத்தின்

நற்பயன்

"புதியவனத்துக் குழந்தைகள்" என்றதன் ஆசிரியரான

S. V. விவேகானந்தா

எழுதியது.

புரவணிகர், கூசாத்தி

திரு. இ. தெம்பரசாமி பாண்டியர்

அவர்கள்

அன்பளிப்பு


சென்னை :

டர்பார் ஜனரல் டிரேடிங் கம்பெனியார்

தபால் பெட்டி 165.


 [விலை அணா 3

# PREFACE

Good cometh out of evil; however little we easily court the evil itself for the good it brings. The war, they say, they that trace cause to consequence, most disastrous as it is in a hundred ways to the world and to the parties engaged, is likely to produce many beneficient results at the same time. The talk has gone forth of the great possibilities occasioned by the war for the industrial development of India; and endeavours have already been begun to be made, which the Government have come forward to guide with advice and help. But not the least important and note-worthy of the good effects of the war is the closer bonds of union into which England and India have been brought. The war has opened the eyes of both to a clearer perception of the love and loyalty, that have always characterised India's relations with England. The war has called forth ebullitions of endearment and regard from the English Parliament and the Press. India's sons are fighting the battles of England side by side with English soldiers in a pure and loving spirit of comradeship. Thus loyalty begot affection and affection must perforce beget loyalty in return. It would be indulging in a truicsm to say that India, scince the outbreak of the war, has grown alive to a deeper sense of loyalty to the British Raj. This booklet is indeed an outcome of this general outburst of feeling. It is written with a spontaneity which who runs may read. It is hoped that the book will find its way into the hands of our youths at home and in schools, and speak straight to their hearts and sure, the Story of England's love for India and India's loyalty to England.

10—11—14 }
MADRAS. }

S. V. VIVEKAN ANDA.

# இராஜபக்தி

அரசபத் தியிற்றி லோத்தோன் அறிஞனும்; அவனை ஞாலம்
பாசிடும்; உவணை யேற்கும்; பகைஞர்கள் நடுங்கா நிற்பர்;
சிரம்உடற் கேற்றம் என்னத் திகழுவன்; ஞாயி றேபோற்
கரவகல் வேந்தன் உள்ளக் கலந்தினி திவர்வன் மாதோ!

திருவிளங்கிய மன்னன் தேர்ந்து ஏற்படுத்திய சட்ட திட்டங்களை யநுசரித்து நடந்து, மிகுந்த அந்யோந்யத்துடன் அவனை நாளும் சேவித்து, அவனுக்குப் பிரதிகூலமாகவே இன்னல் இழைப்பவர்களை வேர் அறச் சாதித்து, அவனுடைய பூர்ண அருட்பிரகாசத்திற்குப் பாத்திரராய் விளங்கி, அவன் நன்கு மதிக்கும்படி நடந்து கொள்வதே இராஜபக்தி எனப்படும். இராஜபக்தி யெனினும் அரச விசுவாசம் எனினும் ஒக்கும்.

அவ்விதம் நாம் நடப்பதேன்? இப் பூவுலகம் முழுதும் படைத்துக் காப்பவர் கடவுளேயாம். எனினும், படைத்தற் றொழிலுக்குப் பிரமனையும், காக்குந் தொழிலுக்கு (விஷ்ணு அம்சமாகிய) மன்னனையும் ஏற்படுத்தியிருக்கின்றார். நீதி நெறிவிளக்கத்தாரும் இதைக்குறித்து,

“ அனைவோர்க்குந் தெய்வம் இலைமுகப் பைம்பூண் இறை.”

(அதாவது) ‘ இலையின் மேற் பரப்பைப் போன்று அவ்வளவு பசுமையான பொன்னால் ஆகிய ஆபரணத்தை

யணிந்து உள்ள மன்னன் சகல கோடி ஜீவராசிகளுக்கும் தெய்வம் ஆவான்' என்று சுருங்கச் சொல்லி விளங்க வைத்தனர். திருவாய் மொழியில் இருந்து, 'அஷ்ட ஐசுவரியங்களை அமையப்பெற்ற மன்னனைக் காணின் திருமாலைக் கண்டதை யொக்கும்' என்பதை

" திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே."

என்பதாலும் நன்கு அறியலாமே.

* " முறை செய்து காக்கும் மன்னவன் மக்கட்கு
இறையென வைக்கப் படும்."

எனப்படலால், நீதியுடன் இந் நிலவுலகைக் காக்கும் அரசன், மனித கோடிகளுக்குத் தெய்வம் ஆகின்றான் ஆதலின், அரசனே கடவுள் அல்லது கடவுளது பிரதிநிதி என்று வெள்ளிடை மலைபோலத் தெள்ளிதில் தெரியக் கிடப்பதாகும்.

அரசன் இன்றிய நாட்டில் நிகழுறும் துன்பங்கள் வாசாமகோசரம். உலகமே மேல் கீழதாய்விடும். அருந்ததி யறிய மணமுடித்த புருஷனுக்கு விரதையல்லாத மனைவி அடங்கிப் பயந்து ஒரு சமயமும் நடவாள். பெற்ற பிள்ளைகள் தாய் தந்தையர்களைச் சிறிதேனும் கவனியாது அவர்களைப் புறத்தே ஓடவிடுவர். பெரியார் அருமொழிகள் அப்போது வெறுமொழிகளாய் விடும். மனிதர் தத்தம் ஜாதி வகுப்பின்படி தமக்கென விடப்பட்ட தொழில்களைச் செவ்வெனே செய்து ஊக்கமுடையவராய்ச் சீருஞ் சிறப்பும் பொருந்தித் தக்க உன்னத ஸ்திதியில் நில்லார். சாதுக்கள் பரம கொடியராவர்.

* திருக்குறள்.

## இராஜபக்தி

நமது பெண்டிர்ப் பிள்ளைகளும், பொருளும் இன்பமும், சுகமும் வாழ்வும், மாசறக் கற்ற மன்னனின் பெருமையால் உண்டாயின. அவனின்றேல், நம் மனைவி கொடியர் வசத்துச் சிக்கி அவஸ்தை மிக்குற்று நமக்கும் அவட்கும் என்றும் அழியாத மானபங்கத்திற்கு வழி தேடுவள். பாடுபட்டுத் தேடிவைத்த பணம் கொள்ளையடிக்கப் பெற்று நம் வயிற்றிலும் வாயிலும் மண்ணை வாரியிட்டு நிரப்பும். தாம் தாம் பெரியர் என்ற மமதையால் கோபாக்னி பொங்கி வழியப் பெற்றவராய் ஒவ்வொருவரும் தமக்குள் அகாரணமான வாதினால் கைகலந்து இரத்தக் குழப்பத்தை யுண்டுபண்ணுவார்கள். மேன்மக்கள் கீழோரால் துன்பம் எய்தப் பெறுவர். ஆதலின், மன்னனின் ஆக்ஞா சக்கரத்திற்குப் பயந்து நடத்தல் நற்குடிப் பிறந்த பெருமக்களின் கடமையாம்.

பூமியாகிய தேகத்திற்கு அதனில் செங்கோல் செலுத்திவரும் ஈடும் எடுப்பும் அற்று விளங்கும் மன்னனே தலை; அத் தேகத்திற்கு மானுடர்களே பல உறுப்புக்கள்; சொல்லுதற்கரிய நன்மைகளை யடையுந் தேகத்தின் உறுப்புக்கள் சிரம் சென்றவழியே தானும் போவதுபோல, வன்மைமிக்க மன்னனுக்குக் குடிகள் எவ்விதத்தும் எக்காலத்தும் எவ்வித முகாந்தரத்தாலும் அடங்கியே நடந்தொழுகவேண்டும்.

இவ்வுலகில் மன்னனைக் காட்டிலும் செல்வத்தில் மிக்கார் பலர் இருக்கின்றனர்; ஆதலின் தாம் அம் மன்னனைவிட உயர்ந்தோர் எனக் கருதுதல் அவர்தம் மடமையை விளக்குமே யன்றி வேறின்று. ஜலம் பாய்கின்ற

நதியைவிட உயர்ந்த வயல் தனது உயர்ச்சியால் விளைவின்றி நாசமுற்று ஒழிகின்றதன்றோ? மேகமண்டலத்திலும் உயர்ந்த தன்மையில் செறிந்து விளங்கும் வரைகளின் மீதுள்ள விருட்சங்கள் இலையுதிரப் பெற்றுக்காய்ந்து விடுகின்றன வன்றோ? அங்ஙனந்தான் செல்வமிக்குற்ற நண்பரின் அவக்கேடு! என்னே! செல்வம் எத்தனை நாள் நிற்கும்? * 'செல்வம் சகடக்கால் போல வரும்' எனக் கூறிய ஆங்கே, இன்றைக்கிருந்த செல்வம் தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்றாகக் கூறிக் கொண்டே சென்றுவிடுகின்றதே. ஆதலின், செல்வத்தை ஓர் பெரும் பொருளென மதித்துக் கர்வித்தல் ஒருவனது பேதைமைக் குணத்தை உள்ளங்கை நெல்லிக்கனி போன்று சான்று விளக்குவதாகும்.

† "கோவரிய சீவன் குடிகள் உடலாவார்
சீவன் சும்மா இருக்கத் தேகம் உழைத்தோம்புதல்போல்
பூவலய மீதினிற்றம் பூட்சிகளி னுழைத்துக்
காவலனைக் காக்கக் கடனுங் குடிகளுக்கே."

எனப்படலால், காவலன் நமது அருமை உயிருக்கும், குடிகள் இவ் வநித்திய தேகத்திற்கும் சமானம்; உயிர் யாதொரு கஷ்டத்தையும் அநுபவியாது இருந்த விடத்தில் சும்மா இருக்குங் காலையில், தேகமானது பலதொழில்களைச் செய்து அவ்வோர் உயிரைக் காத்து நிற்பதைப்போன்று, பூமியிலுள்ள குடிமக்கள் யாரும் தத்தம் மனம் வாக்குக் காயங்களினு லுழைத்து மன்னனைக் காத்தலே அவர்களது உடன் பிறந்த கடமையாம்

* நாலடியார். † நீதிநூல்.

என்க. அரசன் துன்புற்ற காலையில் யாம் இன்புற்றிருத்தல் முறையோ? நீதியோ? ஞாயந்தானாகுமோ? அரிய பெருமரமொன்று வீழ்கையில் அதனைப் பற்றிய கொடி கிளைகளும் உடன்வீழ்ந்து நாசமுறல்போல காவலன் துன்பத்தில் அவதியுறுங் காலத்துக் குடிகளுக்குப் பிழைக்குந் தன்மை யாங்ஙனம் வரும்?

வந்தவர் தம்மின் வருத்தத்தைத் தீர விசாரித்து, அத்துன்பம் இழைத்தவன் தனது ஒரே அருமகவாயினும் அவனை நியாயப்படி தண்டிப்பதற்குச் சற்றேனும் தயங்காதவனும், தனது சுயநலத்தைச் சிறிதேனும் கவனியாது தன்னுடைய குடிமக்களின் சுகதுக்கங்களில் ஆழ்ந்த கருத்துடையோனும், தீச்சொற்களைக் கனவிலும் தன் மனத்திடையேனும் கொள்ளாதவனும், தாய் தந்தையரைப் போன்று எல்லோரையும் நடுவு நிலைமையிற் கொணர்ந்து கண்ணினை யிமை காப்பது போன்று காக்கும் மன்னனைப் புறக்கண்ணால் பார்த்தல் முறையேயோ?

"தாயறி யாத சேயிருந் தாலுந்
தானறி யாதவர் இல்லை
ஆயதன் மையினு லறவழி நிற்கும்
அறிஞரை யறிந்தவர்க் குரிய
தேயவா திக்கந் தந்துநன் னீதி
செலுத்தியெங் கணுமருந் தினுக்குந்
தீயவர் இலர்என் றிசையுற வடக்குந்
திறலுளோன் பூதல வேந்தே."

எனப்படலால், மன்னன் கீர்த்தி மாண்பு மிக்குடைய தாய்த் தன்னகர் மாத்திரமன்றிப் பூவுலகெங்கும் புக

# இராஜபக்தி

மொளி பரப்பி யாவரையுந் தன் வசத்தடக்குந் தன்மைய தாய் நிற்கும் பண்பு கரதலாமலகம் போன்று சான்று விளங்குகின்றதன்றே. தாயறியாத ஓர் மகவு இருப்பி னும் தன்னை யறியாத ஒரு பேதையும் இவ்வுலகில் கிடை யவே கிடையாது என்று சொலப்பெறும் பண்பினனாய்ப் பெறுதற்கரிய நீதிமுறையில் தன்னை நடாத்த, மனந் திருத்திப் பற்றுவதே பற்றிய பணியற நின்றுணர்ந்து நீணெறிநிற்கும் அரியபெரிய மகான்களைத் தேர்ந்தெடுத் துக் குற்றமற்ற நீதியதிபதியாய், மருந்திற்கும் ஒரு துஷ்டரும் நம் நாட்டில் இல்லையென எவ்வுயிரும் போற்ற ஒரு துஷ்டரையேனும் தம் இராஜ்யத்தில் வைக்காது வேரறச் சாதித்து யாவராலும் விரும்பப்படத்தக்க உயர் பதவியில் நிற்கும் காவலனுக்கு நாம் எவ்வளவு கடமைப் பட்டிருக்கின்றோம்?

இம்மட்டோ! தனக்கு மென்மேலும் கீர்த்திப் பிர தாபங்கள் பெருகி நிற்றல் வேண்டும்; பகைவர்களுடைய உயிர்களை மாய்த்து, அவர்கள் தலையை நம் கழுத்ததனில் மாலையதாகக் கொளல் வேண்டும்; தன் குடிகளுக்குத் தன்னாலும் தன் பரிசனத்தாலும் அந்நிய வேந்தராலும் கள்வராலும் யாதொரு தீங்கும் வாராது நம் நாட்டில் என்றும் இன்பரசமே பொழிந்து செழிக்கவேண்டும்; எத் துன்பம் தனக்கு வரினும் இன்பம் நம் குடிகட்கே வருதல் வேண்டும் என்ற தொடக்கத்தக்கனவாகிய விஷயங்களையே தம்மனத்தில் கொண்ட மன்னனுக்குத் துன்பம் வந்த காலத்துத் தூர இருந்து வேடிக்கை பார்ப்பது ஒருவனது மடமையையே விளக்குவதாகும். இதனினும் கொடிய வெட்கம் வேறு எதனினும் கிடையாது. அங்ஙனம்

இருப்பின், அத்தகைய பாதகனை வல்லிடிக்காரர் வலிக் கயிற்றாற் கட்டித் தீவாய் நரகிடை யிழுத்துச் சென்று ஆங்கு மல்லாக்கத் தள்ளி மறித்து வைப்பாரே.

தனது உடல் பொருள் ஆவி மூன்றினையும் உலகார்த்தமாக உதவும் வண்ணம் எண்ணரிய பல்வேறு நீதி சாஸ்திரங்களை நல்லிசைப் புலவர்மாட்டு ஐயந் திரிபறக் கற்றுணர்ந்து, கற்றவாறு அடங்கித் தீநெறி நீஇ நன்றாற்றிப் பெற்றதுகொண்டு மனம் திருப்தியுற்று மனுநீதி தவறாமல் யாவராலும் விரும்பத்தக்க நியாயவழிகளில் தான் முதலில் நடந்து தங்குடி மக்கட்கு வழிகாட்டியாக நின்று விளங்கித் தன்னிடத் தடங்கிய ஞான குணத்தால் யாவர்க்கும் தலைநாயகன் என்பதைக் காரிய சித்திகளால் தெரிவித்து, மானம், குலம், கல்வி, வண்மை, அறிவுடைமை, தானம், தவம், முயற்சி, *தாளாண்மை, தயை, மெய்ம்மை, கடவுள் வணக்கம், அடக்கம், பொறுமை, அபிமானம் முதலிய நற்குணங்களில் அரும்பிப் பூத்துக் காய்த்து நையப் பழுத்துத் தக்க மேம்பாடடைந்து தன்னாட்டிலுள்ள சகலரும் நல்ல ஸ்திதிக்கு வருவான் வேண்டி முயலும் மன்னனைக் காப்பது நமது இன்றியமையாத கடனன்றோ?

* "சத்திரஞ் சோலை சாலைகள் குளங்கள்
தண்ணதி மதகொடா லயங்கள்
வித்தியா சாலை மாடகூடங்கள்
வேறுவே றமைத்துவே ளாண்மை
சத்தியம் அகலா வாணிகம் ஆதி
சகலநற் றொழிலவ ரவர்கள்

* நீதிநூல்.

நித்திய முயல வித்திசை புரக்கும்
நிருபனே நிருபனும் அன்றோ?"

அன்ன சத்திரங்களையும், பூஞ்சோலைகளையும், நீஞ் சாலைகளையும், அழகிய நீலோற்பலங்கள் மிகுந்த தடா கங்களையும், தக்க குளிர்ச்சியைத் தாராநின்ற அருமை யான நதிகளையும், விலையுயர்ந்த பாலங்களையும், சிறந்த தேவாலயங்களையும், எண்ணிறந்த வித்தியாசாலைகளையும், யாவரும் தங்கி நிற்பதற்கு வசதியான மாடமாளிகை கூடகோபுரங்களையும் உண்டாக்கி, நால்வகை வருணத்தா ரும் தம் மதவழக்க முறைப்படிச் செய்தொழில்களில் அதிக ஊக்கத்தைக் காட்டி, நன்னாடுகள் பலவற்றினும் முன்னாட்டிக் கூறப்படும் தன்னாட்டிற்கு நன்மைகளையே புரிந்துவரும் அரசனுக்கு மனம், வாக்கு, காயம் என்ற திரிகரணங்களாலன்றி வேறு எவ்வகையால் உதவி இயற்ற வல்லோம் என்பதைக் குறித்து யோசிக்காத மனுஷ் யன் இவ்வுலகில் இருந்தென்ன போயென்ன ஏ! கச்சி யேகம்பனே!

நல்லறம் இயற்றும் நம் அரும் மன்னனைக் குறித்து இம்மட்டுத்தானோ? அன்று, அன்று;

*" மனுநீதி முறைமையும் பராசர் கொண்டாட
வருமதிக ரண வீரமும்
வான்விஜய மொடுசரச சாதன விசேஷமும்
வாசி மதகரி யேற்றமும்
கனமாம் அமைச்சரும் பலமான துர்க்கமும்
கைகண்ட போர்ப் படைஞரும்

* அறப்பளீசுர சதகம்.

கஜாத பதாதியும் தூகப்ர வாகமுங்
காலதேசங்க ளெவையும்
இனிதா யறிந்தஸ்தா னுபதிக ளொடுசமர்க்
கிளையாத தள கர்த்தரும்
என்றும்வற் றுததன தானிய சமுத்திரமு
மேற்றமுள குடி வர்க்கமும்
அனைவோரு மெச்சவிங் கிவையெலா முடையபேர்
அரசராம் ”

என்பதால் அவர்தம் பெருமை நன்குவிளக்கமுறுமே.

எவன் ஒருவன் ஈசுவரனிடத்தில் தன்னுடைய அந்தரங்கமான பக்திநெறியைக் காட்டுகின்றானோ அவன் எவரும் பெறுதற்கரிய பெரும் பேற்றினை யடைந்து நித்தியானந்த சுகத்தை யனுபவிக்கின்றான் என்பதை எந்த மதஸ்தர்களும் மறுக்க ஒண்ணாது. இவ்வாழ்வும் அவனுக்கு மறுமையில்தான் உண்டென்பர். ஈசுவரனுக்குப் பிரதிநிதியென்னும் மன்னனை உள்ளவாறு விச்வாஸித்தால் இம்மையிலேயே எல்லா நல்வாழ்வும், செல்வமும், கீர்த்தியும் நமக்கு வந்தடையும் என்பது வெளிப்படை.

† “ தவமது செய்தே பெற்றெடுத்தவன் முதற்பிதா ;
தயையாக வித்தையைச் சாற்றினவன் ஒருபிதா ;
சார்ந்த சற்குரு ஒருபிதா ;
அவமறுத்தாள்கின்ற அரசன் ஒருபிதா.”

என்றவாறு அரசன் நமது தந்தை யாகின்றான் ; ஆதலின் அரசியும் நமது தாயாகின்றாள்.

† குமரேசசதகம்.

"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்
தந்தை சொன்மிக்க மந்திர மில்லை
தாய் சொற்றுறந்தால் வாசக மில்லை
தாயிற் சிறந் தொரு கோயிலு மில்லை
தந்தை தாய்ப் பேண்."

என்ற மூதுரைகளை நம் மனப்படுத்தி அரசன் அரசியரிடத்து அதிக பயவிநய நெறியுடன் நடந்தொழுக வேண்டு மன்றோ ?

பெற்றோர்க்கு நாம் அங்ஙனம் கடமைப்பட்டு நடத்தல் எதுபற்றியோவெனின், அவர்கள் நம்மைப் பெற்றெடுப்பதால் அடைகின்ற துன்பங்களைத் தினை தினை நமது வாணாட் பயிற்சியில் பார்க்கின்றோமே. நம்மைப் பெறுவதென்னின் எளிய காரியமா ? இருமுது குரவரும் மகப்பேறின்மையால் எண்ணாத எண்ணமெல் லாம் எண்ணியெண்ணி ஏழைநெஞ்சம் புண்ணாகி "நெடுமூச்செறிந்து, என்செயக்கடவோம் எனவருந்தி, விளக்கு நிலையொடு விரிச்சி யாராய்ந்தும், கட்டுவைப்பித்தும், கணக்குப்த்துணரும் கண்ணுடைச் சோதிட நாடியும், புண்ணிய தீர்த்தம் பொருந்தி யாடியும், தரை மெழுகி யுண்டு தவம்பல புரிந்தும், பகலுணா இரவுணா பட்டினி இருந்தும், அருநோன்பு செய்தும் பெருவேள்வி யாற்றியும், மாதவரைப்பேணியும் ஆதுலரையளித்தும், வானவரை வழிபட்டும் தானமது பலசெய்தும், அறவரையடைந்து நெறிமுறை பணிந்து, கவலைகளறத்திளஞ் சிவ கதைகேட்டும், உலகினையளந்த நெடியமால் முன்னே, ஒரு மகன் வேண்டிப் பெருமாதவஞ் செய்து, பூசை புரிந்த ஈசனையம்முறை, கந்தனெந்தையொடு கவுரி

யென்னம்மை பந்தமா வைத்தபடி யருச்சித்தும், அந்த சீர்கேட்டும் ஆதரித்திருந்தும், பன்னுளுழைத்த இன்னோர் விரதத்தால்" பெறப்பட்ட நாம் அவர்கட்கு எவ்வளவு கடமைப்பட்டிருக்கவேண்டும்; எவ்வளவு நன்றியறிவுள்ளவர்களாகவும் பயபக்தியுடனும் இருத்தல் வேண்டும்; நம்மைப் பெற்றெடுத்தவர்களோ நமக்கு மாத்திரம் தந்தைதாயாவர். அரசனரசியோ, நம் அருமையான தேசத்தின் மக்களனைவருக்கும் தந்தைதாயாவர். இத்தகைய பெரும்பேற்றினை யடைந்த அன்னவரை யாம் எவ்விதத்தும் கனப்படுத்தவே வேண்டும்.

நாம் ஒரு காரியத்தைச் செய்யத் தொடங்கி அது சித்திபெறாது போகும்சமயத்தில் தான் வந்து முடித்துத் தருபவனே தமையனுவன். நம்முடைய தலைக்கே இடர் வந்தபோது நன்கு உதவுவோன் தாய்தந்தை எனப்படுவான். ஒன்னூர் செயுங் கொடுமையால் மெலிவு வந்தபோது உதவுவதே நமதிஷ்டதெய்வம். யுக்தி புத்திகள் சொல்லி இனி வரக்கூடிய காரியங்களைத் தேர்ந்தெடுத்துரைப்பவனைக் குருவெனப் பெரியோர் குறித்துரைப்பர். எந்நாளும் நமக்கு வருநன்மை தீமைகளைப் பகிர்ந்து அனுபவிப்போரைப் பந்துவென்பர். இத்தகைய குணங்கள் யாவும் அரசனிடத்தில் காணப்பெறுகின்றன ஆதலின் நமக்கு அரசனே தமையன்; அரசனே தாய் தந்தை; அரசனே நாம் வழிபடுதெய்வம்; அரசனே குரு; அரசனே பந்து. பலவாறுரைத்தலென்? அரசனே யாவுமாம்.

மேனியிர் மழைக்குதவி மடமாதர் கற்பொன்று;
வேந்தர் தங் நீதியொன்று; வேதியர் ஒழுக்கமொன்று;

இம் மூன்றுமேயென்று மிக்க பெரியோர் உரைசெய்குவர். நம் வயிறு வளர்த்தற்பொருட்டு இன்றியமையாத வுதவிகளை நாளும் கொழிக்கும் மழைக்கு நமது அருமை மன்னனது நீதி அத்தியாவசியம் ஆதலின், அது இன்றேல் நாம் எத்தகைய கஷ்டநிஷ்டூரங்களுக்கு உடன்பட வேண்டும்.

இம் மண்ணிடைத் தோன்றிய எண்ணிறந்த மனுஷ்யர்களின் நடுநாயகனான மன்னனிடத்திலே அற்பெருங் கோதை * மலர்மங்கை வாழிடம் ஆதலால் நம்மினும் அரசன் பல் வகையினும் மேம்பாடுடையவன் ஆகின்றான் என்பது வெளிப்படையாகின்றது.

கடலுலகில் வாழும் உயிர் எழுபிறப்பினுள் மிக்க காட்சி பெற்ற நரஜென்மம் எடுத்தலரிது. அதினுமுயர் சாதியில் கற்புவழி வருதல் அரிது. வடிவமுடன் அவயவங் குறையாது பிழையாது வருதல் அதனினும் அரிதரிது. வந்தாலும் இது புண்யம் இதுபாபம் என்றெண்ணி மாசற்ற நல்வழியில் நிற்றல் அரிது. நெடிய தனவான் ஆதல் அரிது. அதனில் இரக்கமுள நெஞ்சினோன் ஆதலரிது. இவ்வகைய அருமையால் பல்லரும் பதவியைப் பன்னெடும் பகலெலாம் பயின்ற பான்மையால் ஒல்லையிலடைந்து எவரும் பெறுதற்கரிய உயர் பதவியையடைந்த மாசற்ற மன்னனின் தாள்களை நாளும் வழிபடாதவன் பெரும் பாபியாகின்றான். பகலில் ஒளியிழந்த சந்திரனும், யௌவனம் கழிந்த ஸ்திரீயும், தாமரையில்லாத ஓடையும், கல்வியறிவில்லான் வனப்பும்,

* லக்ஷ்மி.

பொருளாசை மிக்க பிரபுவும், யோக்கியனுக்கு வந்த வறுமையும் எங்ஙனம் துன்பத்திற்கு ஏதுவாகின்றனவோ, அங்ஙனமே, அரசனை அண்டை கொண்ட கீழ்மகன் இம்மையிலும் மறுமையிலும் துன்பமுறுவான். ஆதலின், இராஜபக்தி ஒவ்வொருவன் உள்ளத்திலும் உள்ளூறிப்பரவி வேரூன்றி நிலைநிற்கவேண்டும்.

உலகம் செழிக்க விவசாயம், நெசவு, சிற்பம், தச்சு, கொல்லு முதலிய செய்தொழின் முயற்சிகள் மிகவும் இன்றியமையாதவை. அவைகள் யாவையும் ஒவ்வொருவனும் கற்றுத் தெளிதல் அசாத்தியம். மற்று, சாத்தியப்படுவதற்கு அவர்கள் யாவரும் ஒருங்குகூடி வாழ்ந்து தமது முயற்சிகளில் வல்லுநராதல் வேண்டும். அங்ஙனம் ஒன்றுகூடி வாழ்பவர் தம்முள் சண்டையின்றி ஒற்றுமையுடன் வாழ்வதற்கான பல்பெறும் வசதிகளைச் செய்வதற்கெனவே ஒவ்வொரு தேசத்திலும் இராஜாங்கம் ஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றது. தமக்குப் பல நன்மைகளைப் பெற்றுக்கொள்வதற்காகக் குடிகள் அரசன் ஒருவனை நியமித்துக் கொண்டதால், அவன் தேர்ந்து ஏற்படுத்தி வரும் சட்டதிட்டங்களுக்குப் பயந்து நடக்கவேண்டியது மிகவும் முக்கியமாகின்றது. உலகமாகிய உடலுக்கு அரசனே தலை; பிரஜைகள் பல உறுப்புக்கள்; இந்த எண்சாண் உடம்பிற்குச் சிரசே பிரதானம். தலையில்லாத சரீரம் எப்படி உஜ்ஜீவித்து நில்லாதோ அவ்விதந் தான் மன்னன் இன்றிய மா அரும் தேசம்.

குடிகளால் நியமிக்கப்பட்ட மன்னன் குடிகளைக் காட்டிலும் புனிதனானவன் என்பதை யாவரும் மறுக்க

ஒண்ணூர். அதுபற்றி யவனை யாவரும் தக்கவாறு மதிக்கின்றனர். பகலவன் உயர்ந்த இடத்திலிருந்து பிரகாசியாவிட்டால் உலகம் ஒளி பெறாததுபோலவும், கரியமேகங்கள் உன்னத ஸ்தானம் ஒன்றிலிருந்து வருஷியாவிட்டால் உலகம் செழிக்காததுபோலவும், மன்னனை உயரிய ஸ்தானம் ஒன்றில்வைத்து நாம் ஒருங்கு கூடி மதிக்காவிடில் உலகம் உயர்ந்தோங்காது.

"மாதாவுக்குச் சுகமிருந்தால்தான் கர்ப்பத்திற்கும் சுகம்"

என்ற ஓர் பெரியோர் வாக்கிற்கிலக்காக, மாசற்ற மன்னன் யாதொரு குறைவின்றிச் சுகமாயிருந்தாற்றான் குடிகளுக்கும் சுகம் என்றறிதல் வேண்டும். அவனை, மனம் வாக்குக் காயங்களினால் வழிபடவேண்டும். முதலில் மனத்தால் அவனுக்கு எங்ஙனம் நாம் நன்மை பயக்க வல்லோம் என்பதைச் சிறிது கவனிப்போம். மனம் திரிகாண சுத்திகளில் ஒன்று என்பதை யாவரும் ஒப்புக்கொள்வார்கள். அம்மனம் என்றும் களங்கமற்றது. அதைப் பக்குவ நிலைக்குக் கொணர்ந்து பின்னர் ஈசுவரனிடத்தில் நிறுத்தி அவனைப்பாடித் தோத்தரித்தால் நமக்குப் பயக்காதது என்னே! இப்பூவுலகில் ஒன்றும் இல்லையாம். அவ்விதமே அரசனைக் குறித்துத் தினே தினே வழிபட்டு வருவோமாயின் அவனுக்கு ஆயுட் பெருக்கும், தோள்வலியும், மனோதைரியமும், விடா முயற்சியும், செல்வச் சிறப்பும், குடிகள்பால் அன்பும், கடவுளிடம் பக்தியும், நாளுக்குநாள் வளர்பிறைபோல வளர்ந்து தன்னந்தனியாய் அவனது இருதய கமலத்தில் நற்குணங்கள் அரும்பிப் பூத்துக் காய்த்துப் புஷ்பித்துக்

குடிகளிடம் தக்கம் மாறு மணத்தை வெளியிடுமே. இதுவே மனத்தினால் செய்யப்படும் காரியமாம்.

கற்றறியா மூடர்கள் மனம் உருகி இராஜபக்தியுடன் செறிந்து விளங்குதற் பொருட்டு சமயம் வந்த காலத்திலெல்லாம் மகா சபைகள் கூட்டி அவர்களுக்கு நல்ல புத்திமதிகளைப் புகட்டி, அரசனைக் குறித்துச் சிலாகித்துப் பேசி வாழ்த்துவதே வாக்கின் காரியமென்ப.

மன்னனின் பொருட்டு நாம் கொடுக்கவேண்டிய திறைகளை ஒருங்கே செலுத்தி, அவனுக்குத் துன்பம் இழைக்கும் கொடியர்களை வேரறச் சாதித்து, எவ்வழிகளிலும் நமது உடல் பொருள் ஆவி மூன்றினையும் அவனுக்காகச் சமர்ப்பித்து, அவனது துன்பத்தை நமது கண்ணிற் பட்டதைப் போலப் பாவித்து உழைப்பது நங் காயத்தாலாய காரியமாம்.

சூரியனிடத்தில் வெப்பமும், சந்திரனிடத்தில் களங்கமும், மேகத்தினிடத்தில் இடியும், புஷ்பங்களினிடத்தில் முட்களும் இருத்தல் இயற்கை யாதலான், பெருமை பொருந்திய அரசன் எவ்வளவு சிறந்தவனாயினும் உருவத்தில் ஓர் சாதாரண மனுஷ்யனே யாதலால் அவனிடத்திலும் சில குணதோஷங்கள் காணப் பெறுவது சகஜமே. அதுபற்றி, அவனை அவமதியாது நீரைப் பிரித்துப் பாலை யுண்ணும் அன்னம்போல அரசனிடத்தில் காணக்கூடிய குற்றங்களை நீக்கிக் குணத்தை மட்டும் நாம் கைக்கொள்ளவேண்டும்.

தனக்கும் தன் குடிமக்களுக்கும் துன்பம் இழைக்கும் சத்ராதிகளை யடக்கவும், நியாய பரிபாலனம் நடத்த

வும், தேசநன்மையின் பொருட்டுப் பற்பல காரியங்களைச் செய்யவும் வேண்டிய சதுரங்க சேனைகளையும் ஏனைய தொழிலாளர்களையும் நியமித்துக் காக்க மன்னன் கடமைப்பட்டிருப்பதால் நமக்காக விதிக்கப்பட்ட வரிகளைச் செலுத்த நாமும் கடமைப்பட்டிருக்கின்றோம். ஓர் மரத்தடியில் உள்ள வேரிற்பட்ட ஜலம் அம்மரம் முழுதையும் பற்றுகிறதன்றோ? நாம் வயிறார உண்ட உணவு ஜீரணித்து நமது தேக முழுவதிலும் வியாபித்து நிற்கின்றதன்றோ? அவ்விதந்தான், அரசனிடம் சமர்ப்பிக்கின்ற வரி நமக்காகவே செலவழிக்கப்படுகிறது என்பதைக் கீழ்மக்களும் நன்கு உணர்வார்கள்.

ஒவ்வொருவனும் தனக்கென விதித்த வரியை மனமகிழ்ச்சியுடன் செலுத்தி ராஜவிசுவாசத்துடன் விளங்கியிருத்தல் எல்லாவற்றிற்கும் முதற் கடமையாகும். மேனாட்டு மக்களும், கீழ்நாட்டாரும், ஒருங்கு சேர்ந்து ராஜபக்தியைப்பற்றிப் பலவாறுரைத்துப் புகழ்கின்றனர். நமது வேதசாஸ்திரம், தர்மசாஸ்திரம், மனுநீதி, சுக்கிரநீதி, உபநிஷத்துக்கள், புராண இதிகாசங்கள், ஐம்பெருங் காப்பியங்கள் முதலிய யாவும் ராஜத் துரோகமே பாவங்களுக்கெல்லாம் தலையென நாளும் முறையிடுகின்றன.

ஏழுலகும் படைத்தளித்துத் துடைத்துக் காக்கு
　　மெம்மானைப் பேரரசை யிறைவன் றன்னை
வாழுமு^ ரத்தனையும் வாழ்த்தி யுய்யும்
　　வாறேபோ னமக்கென்ன வாய்த்த கோவை
ஆழுதலோ டவனுக்க நமதென் றெண்ணி
　　யவற்கூறு நாடாவா றகற்றிக் காத்துத்

தாழுதலு மவனேக்க மறிந்துசெய்தற்
றகவாகுங் குடிகளுக்குச் சாதமீதே.

ஆதலின், ராஜத்துரோகி இம்மையிலும் மறுமையிலும் கொடிய தண்டனைக்கு உட்படுவான்.

நீதியுள்ள அரசிறையினல் குடிகள் அடிமைத் தனம் நீங்கி நிற்கின்றனர். தோட்டி முதல் தொண்டை மான்வரையி லுள்ளார் தத்தமக்குரிய உரிமைகளைப் பெறுகின்ருர்கள். அரிய உயிரும் அதற்கு அச்சாணியா கிய உடலும் அவ்வுடலுக்கு ஆதாரமாகிய செல்வமும் காப் பாற்றப்படுகின்றன. நீதிமுறையும் நியாயமும் ஒருங்கே பரிபாலிக்கப்படுகின்றன. அன்னைபோல் இரட்சித்து, தந்தைபோற் சிட்சித்து, மனைவிபோல் இன்பஞ்செய்து, மைந்தன்போற் பணிசெய்து, அறம் பொருள் இன்பம் வீடு என்ற சதுர்வித புருஷார்த்தங்களை எளிதில் அளிக்க வல்ல கல்வி நாளும் தேசத்தில் விருத்தியாய் வருவது மாசறக்கற்ற மன்னனின் மாண்பினுற்ருன். அந்நிய தேசங்களுக்குச் சென்று வர்த்தகஞ்செய்து திரவியந்தேடி நவீன நாகரீக முறையில் இனிது வாழ்வதும் அரசனின் கிருபையினுற்ருன். பெரிய சபைகளில் தமது அபிப் பிராயங்களை நிலைநாட்டிப் பேசவும், தமக்குரித்தாய மதா சாரங்களைக் குறித்து சம்வாதிப்பதும் அரசனது கருணை யினுலன்றி வேறின்று. ஆதலின், அரசனுக்கு நாம் எவ் வளவு நன்றியறிவுள்ளவர்களாக இருத்தல் வேண்டும் ?

நாய், ஆடு, மாடு முதலிய தாழ்ந்த ஜீவன்களிடத் திலுங்கூட நன்றி சிறந்து விளக்க முறும்போது, ஐம் பெரும் புலன்களின் நாயகர்களான மனிதர்கள் அதனைக்

2

கையாடாது மறந்து வெறுத்து இருத்தல் எவ்வளவு மதியீனம்? தான் பிறருக்கு உபகரிப்பதற்கு ஏற்ற நிலைமையில் ஒருவன் இல்லாது போயினும் தனக்குச் செய்த உபகாரத்தையேனும் மனத்தில் நினைக்கலாகாதா? பிறர் செய்த நன்றியை மறத்தல் தர்மமன்று; அவர்கள் செய்த தீமையை மறந்து இன்புற்றிருத்தலே தலையான தர்மமாம். எவ்வகைத் தருமங்களை யழித்தவர்களுக்கும் ஈடேறும் வழியுண்டாம். செய்ந்நன்றி கொன்றார்க்கு ஈடேறும் வழியே யில்லை. இது பற்றியே வள்ளுவர் வாய்மொழியில்,

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்றும்,

"நிலம்புடை பெயர்வதாயினும் ஒருவன்
செய்திகொன்றார்க்கு உய்தி இல்."

எனப் புறநானூற்றிலும் எழுதியிருப்பன சான்றாகும்.

நமக்கு இவர் வேண்டியவர் என்று கருதி ஆபத்து வந்த காலத்து நமக்கு உதவியவருக்கு விரோதமாக, அவர்களுடைய பகைவர்களுடன் கூடிக்கொண்டு அவர்களுக்கு இன்னல் இழைப்பது, தாம் ஏறியுட்கார்ந்திருந்த மரக்கிளையை ஞாபகமின்றி வெட்டிவிடுவதை யொக்கும். அத்தகையான் இவ்வுலகில் செய்ந்நன்றி கொன்ற மா துரோகி என்ற பெரும்பேரொன்று படைக்கின்றான். அவனிடம் நல்லோர் சிநேகியார். அவனால் உலகத்திற்கே என்று மழியாப் பாவமும் பழியும் வந்துசேரும். இவ்வுலகினு மன்றித் தான் செல்லும் உலகிலும் அவனுக்குத் துன்பமே வாய்ப்பெறுவனாதலின், "நன்றி மறவாமை" முக்

கியமாம் என்க. இது பற்றியே, ஔவையும் "நன்றி மறவேல்" எனச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தனள். செய்ந்நன்றி மறவாதபேர்களைச் சற்புருடரென்று உலகில் அகமகிழ்வர்.

அடைக்கலம் எனத் தேடி வருவோர் தம்மைக் காத்தலால் அரசனே மகாபுருஷனும். அஞ்சாமல் எது வரினும் எதுபோகினும் சித்தம் அசைவின்றி நிற்றலால் அரசனே மகாதீரனும். தொடுத் தொன்று சொன்ன சொல் தப்பாது செய்கின்றதால் அரசனே தோன்றலாவான். தூறிக் கலக்கின்ற பேர்வார்த்தை கேளாததால் அரசனே மகாமேருவாம். தன்னை அடுக்கின்ற பேர்க்குவரும் இடர்தீர்த்து இரட்சிப்பதால் அரசனே மகா தியாகியாம். அவரவர் தாரதரம் அறிந்துசெயும் அவ்வரசனே மகா வசிதனும் எனப்படலால், அரசனே மகா புருஷன்; அரசனே மகாதீரன்; அரசனே தோன்றல்; அரசனே மகாமேரு; அரசனே மகாதியாகி; அரசனே மகாவசிதன் ஆதலின் அரசனே எல்லோராலும் நன்கு போற்றற் குரியன்.

அன்னவனுக்கு என்ன அரும் நன்மையைச் செய்து முடிக்கலாம் என்பதை நினையாதவன் மனுஷ்யனே யல்லன். அம்மனுஷ்யன் இப்புவியில் இருப்பதால் ஆயபயனென்கொல்? அவனது செல்வம் குரங்கு கையில் இருந்த பூமாலையை யொக்கும். பன்றியைச் சேர்ந்த கன்றும் மலமுண்ணும் என்றாற்போல அவனிடம் வந்து சேர்ந்த செல்வமும் தன்னியற்கை வலி குன்றி மழுக்கமடைகின்றது. குணமற்ற பேய் முருக்கந்தழை தழைப்பதாலென்ன பயனோ? குரைக்கின்ற நாய்மடி சுரந்

தென்னவோ? மணமற்ற செம் முருக்கம்பூத் தலர்ந் தென்னவோ? மதுரமில்லா உவர்க்கடல் நீர்ப்பரவியே நிற்பதாற் கொண்ட பயனென்? உணவற்ற பேய்ச் சுரை படர்ந்தென்ன, படராது உலர்ந்துதான் போகி லென்ன? ஆதலின், உதவாத பேர்க்குவரு பெரு வாழ்வு வருவதால் யாது நன்மை?

நம்பொருளை யொருவர் களவாடிப் பிடுங்கித் தம் பால் அடைந்தேகினராயினும் நம்மை ஏசிப்பேசிப் பல் வாறு இகழ்ந்து கூறினராயினும் நாம் எங்ஙன்போய்த் தஞ்சமெனப் புகலுவது? அரசனிடமே யன்றி வேறின் றும். உடனே நம் மன்னன் நம்மைத் துன்புறுத்தியவரை யழைத்து ஒறுத்து நம்மை ஆபத்தினின்றும் விடுவிக்கின் றானன்றோ? ஒருவன் செய்த குற்றத்திற்காகத் தெய் வம் உடனே தண்டிப்பதில்லை; மன்னனோ அவ்வாறின் றி. அக்கணமே யொறுக்கின்றான். இது பற்றியே,

"அரசு அன்று ஒறுக்கும்; தெய்வம் நின்று ஒறுக்கும்"

என்றோர் நன்மொழியும் வழங்கி வருகின்றதே.

"கொலையாற் கொடியாரை வேந்தொறுத்தல்
பைங்கூழ் களைக் கட்டதனோடு நேர்."

என்ற பெரியார் வாக்கிற் கிலக்காகப் பயிரைச் சுற்றிய களையைப் பிடுங்கிப் புறத்தே யெறிவதால் எவ்விதம் பயிர் நன்றாய் விளையுமோ, அவ்விதமே நல்லோரைச் சுற் றிய தீயோரை அரசன் ஒறுத்தல் வேதப்பிரமாணமாம். துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனம் அரச நீதிக்கு உரித்தா யது என்ற கருத்தை,

" குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வழுவன்று வேந்தன் றொழில் "

என்னும் சான்றோர் மொழி நன்கு விளக்குமே.

" தீயோரை ஒறுத்தலும் நல்லோரைப் புரத்தலும்
வேந்தன் றொழில் "

" அந்தணர் நூற்கும் அருமறைக்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல் "

" மாதவர் நோன்பும் மடவார் கற்பும்
காவலன் காவலன்றித் தங்கா "

" வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி "

என்பன அரசநீதியை விளக்குவனவாம்.

மன்னனின் மாசற்ற ஆக்ஞையால் தர்மம் பெருகி, அதர்மம் குறுகி எல்லா ஜீவராசிகளும் இனிது வாழ்கின்றன. தண்ணீரில் மிதக்கும் கட்டை தண்ணீர் எவ்வழி ஓடுகின்றதோ, அதுபோன்றே மன்னனின் ஆட்சியை யாம் அநுசரித்தே நடந்தொழுக வேண்டும். " அரசன் எவ்வழி அவ்வழி குடிகள் " என்பது இது பற்றியே யாகும்.

" வரம் புயர நீருயரும்
நீருயர நெல்லுயரும்
நெல்லுயரக் குடியுயரும்
குடியுயரக் கோனுயர்வான்."

" திருவும் அரசிலாரில் வழியில்லை
அரசனும் இல்வாழ்வாரில் வழியில்லை."

" குடித்தனம் செழித்தால் துரைத்தனம் செழிக்கும்."

என்பனவுங் காண்க. யாரைப் பகைத்தாலும் பகைக்கலாம் அரசனைப் பகைக்கலாகாது. மழைக்குக் குடை பிடிக்கலாமே யொழிய இடிக்குக் குடைபிடிப்பார் இவ்வுலகில் யாவரே உளர்? வேந்தனே நம்மீது சீறின் நமக்கு ஆந்துணை யாது? அரசனைப் பகைத்திட்டவர் ஆருயிர் இழப்பரன்றோ? நதி உடைப்பெடுத்தால் அணை போடலாம்; கடல் கரை புரண்டால் யாவரே அணைபோட வல்லார்? ஆதலின் யாவரும் அரசனிடத்து அன்புகொள்ள வேண்டும்.

" கொற்றவ னறிதல் உற்றிடத் துதவி."

பல்வளஞ் சிறப்பினை யுடைய அயோத்தியில் பெருமாட்சியுடன் அரசு புரிந்த மன்னனும் அரிச்சந்திரனின் நன் மந்திரியும், கோதிலாப் பெருங் குணத்தானுமான **சத்தியகீர்த்தியும்**, ஸ்ரீ ராகவனின் பிரஜையான குகனும் இராஜபக்தியில் மிகப் பேர்படைத்தது உலகறியாதோ!

இராஜபக்தியே புருஷன் ஒருவனுக்கு அழகு செய்விக்கும் அணிகலனும். அஃதே உலகினரை இன்புறுத்துவது; புதைத்த பொருள்போலக் காலாந்தரத்தில் உதவுவது. இராஜபக்தியே பல்வகை இன்பங்களையும் அவற்றிற்குரிய சாதனங்களையும் கொடுப்பது. இராஜபக்தியே பூவுலகெங்கும் புகழொளிபரப்புவது. இராஜபக்தியே பரமானந்தத்தைப் பயப்பது. இராஜபக்தியே வேற்று நாடுகளில் உறவினர்போலப் பல்லுபசாரமும் புரிவது. இராஜபக்தியே உற்றுழி உதவுவது. இராஜபக்தியே

வேந்தரவைக்கண் வீறடைவது. இராஜபக்தியே பல்லரும் இன்பங்களுக்குங் கருவியாய பொருள். இராஜபக்தியே வறுமைப்பிணியைப் போக்கவல்லதோர் அரும்பெருஞ் செல்வம்; இராஜபக்தியே யாவரிடத்தும் நன்மதிப்பை விளைவிக்கும். இராஜபக்தி யுடையோனே அறிஞன்; அவனை ஞாலம் புகழ்ந்து பேசும்; பகைஞர்கள் நடுக்கங் கொள்வர்; சிரம் உடற்கு ஏற்றம் என்னத் திகழுவன். பலவாறுரைப்பதென்? இராஜபக்தியே பொருள் இன்பம் முதலிய எவையும் பயப்பதால் யாவரும் இராஜபக்தியுடன் என்ஞான்றும் எவ்விடத்தும் இன்புற்று உய்வாராக!



# ஆங்கில துரைத்தனத்தின் நற்பயன்

---

“ அறந்தலை நிறுத்தி வேதம் அருள்சுரந்
தறைந்த நீதி
திறந்தெரிந் துலகம் பூணச் செந்நெறி
செலுத்தித் தீயோர்
இறந்துக நூறித் தக்கோ ரிடர்துடைத்
தேக வீண்டு
பிறந்தனன் பிறவி நோய்க்கு மருந்தவன்
பிறிதொன் றுண்டோ ! ”

பூமாதின் அழகிய முகத்தின் திலகமே யென்ன விளங்கும் இப் பரத கண்டத்தில் நற்புகழ்பெற்ற நல் அரும் மாந்தராய நம் இந்தியருக்கு ஆங்கில துரைத் தனத்தார் நாளும் இயற்றிவரும் எண்ணரிய நன்மைகளை இங்ஙன் எடுத்துரைப்பதன் முன்னர் அவ்விந்தியாது ஆதிவரலாற்றிற் சிலவற்றை எடுத்துக் குறித்தல் முக்கியம் என்பது சொல்லாமலே பெறப்படுவதாகும்.

இந்திய மகமதிய மன்னர் காலத்து இத் தேசத்தின் நிலைமையைக் குறித்து நூன்முறையாயும், கற்சிலைகளாலும், கர்ண பரம்பரையாகவும் அறிந்த முதியோர், எண்ணிக்கை யற்ற அரசர் ஏககாலத்தில் ஈண்டு ஆண்டு தத்தமக்குள் சண்டையிட்டு ஒற்றுமையே யின்றி ஒருவருக் கொருவர் பயந்து ஒளிந்து வசித்து வந்தனர் என்பதை நன்கு கூறுவரே.

ஜாதி வித்தியாசத்தினுல் ஹிந்துக்களும் மகமதியர்களும் ஜன்மதுவேஷம் பாராட்டிய விதமும், அதனுல் விஸ்தாரமான நாடுகளை யழித்து, கிராமங்களை யெரித்து, வீடு வாசல்களைக் கொள்ளையடித்து, ஜனங்களிடம் அநியாய வரிகளை இறுத்துக், கற்ருேர்க்கும் மற்ருேர்க்கும், உற்ருேர்க்கும் உறவினர்க்கும், பெண்டிர்க்கும் பிள்ளைகட்டும் துன்பம் இழைத்து யாவர்க்கும் பீதியைத்தந்த கொடுமையைக் கேட்கும் நமக்கும் மயிர்க்கூச்செரியாதுநில்லாது.

நாடுகளிலெல்லாம் திருடரும், காடுகளிலெல்லாம் வழிபறிக்காரரும் உலவி நின்றதால், யாவரும் திரள் திரளாய் ஆயுதபாணிகளாய்ப் போனுலன்றித் தங்கள் உயிரைக் காத்து வருதல் அரிதாம்.

அப்போது தெருக்கள் அருமை ; அயாத வீதிகள் கிடையா ; தபாற்சாலை, பாடசாலை, நீதித்தலம், வைத்திய சாலை, அச்சுப்புத்தகம், புதினப் பத்திரம், திரவிய வர்த்தகசாலை முதலியன கனவிலும் இன்று. பாடுபட்டுத் தேடிய பொருள் புதைவுற்றன; நாடுகளில் உள்ள நல்லோர் வதைகொண்டனர். அருந் தவத்தோர் வெறும் மனத்தோரரயினர் ; பெரும்பொருளார் உறுந் துன்பம் எண்ணிக்கையற்றன ; தமது உடல் அழியாமலே அவர் பெற்ற புனர் ஜன்மம் மிகுதி கொண்டன. தம்மைப் பகைவர்கள் நாளும் வருத்துவாராதலின், அவர் பரம ஏழை எளியர்களைப் போல நடித்தனர். இராஜ பொக்கிஷங்கள் எளிதில் காலியாக்கப்பட்டன. உருவுந் திருவும் மிக்க பெண்டிரது கற்பிற்கும் ஓர் பங்கம் நேரிடுதலும் உண்டு. மனிதர்

தத்தம் ஜாதி வகுப்பின்படி தமக்கென விடப்பட்ட தொழில்களைச் செவ்வனே செய்து ஊக்க முடையவராய்ச் சீருஞ் சிறப்பும் பொருந்தித் தக்க உன்னத ஸ்திதியில் நில்லாதொழிந்தனர். ஐம்புலன்வென்ற சாதுக்கள் நாட்டில் இருப்பின், தம்மைக் கொடியர் வருத்துவரோ என்ற பெரும் பயத்தால் மரவுரிதரித்து காடு மலைகளில் புகுந்து ஒளிந்து தவமியற்றுவாராயினர்.

ஒருவன் புண்ணிய க்ஷேத்திரங்களைப் பார்க்க விரும்புவனாகில், அவன் தன்னுடைய சொத்து சுதந்தரங்களை மனைவியிடம் உயில் எழுதுவித்துப் போவன். நாளும் திருடர்பயம் அதிகரித்து வந்ததால், குடிமக்கள் பகற்காலத்தில் உறங்குவதும், இராக்காலத்தில் விழிப்பது மாயிற்று. அதுபற்றிப்பற்பல கொடிய ரோகங்களுக்கு அவர்கள் உட்பட்டு எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி யெண்ணி ஏழைநெஞ்சம் புண்ணாகித் தவித்து நின்றனர்.

ஹைதர் காலத்திலும் நம் மூதாதையர் மரங்களின் உச்சத்துச் சென்று, பறவைகள் இடத்தில் தாங்கள் ஒன்றியிருந்து கனியேனும் அரிய செங்காயேனும் உதிர் சருகு கந்தமூலங்களேனும் புசித்துப்பகைவர்களின் கொடுமைக்குப் பயந்து கண்மூடி வாய் திறவாதுமௌனியாகித் தனியாயிருந்து வருந்தியதை உலகறியாதோ? தங்கள் உயிர்காக்கத் தம்மிடம் உள்ள அரும் பெரும் செல்வம் யாவையும் பெரும் பாத்திரங்களில் வைத்து நிரப்பிக் கிணறுகளில் போட்டு அவைகளின்மீது மண்ணை நிறைத்ததனாலன்றோ தற்போது நம்முட் சிலர் அவைகளைக்கையாடி இனிது வாழ்வது! மற்று, நம் வாய்கொண்டு

எடுத்துரைப்பதற்கும் கொடியவான எண்ணிறந்த கொடு மைகளால் சிற்சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் நம் மூதாதையர் அவதியுற்றதைப் பன்னிப் பன்னிப் விரித் துரைப்பதால் நம் மனம் அனலிலிட்ட மெழுகுபோன்று உருகி வாட்டமுறும் ஆகலான், அதனைத் தேற்ற ப்ரிடிஷ் செங்கோன்மையின் நன்மைகளின் மகிமையை யெடுத்து உரைத்துக் கோதிலாப் பெருங் குணத்தரான ஜ்யார்ஜ் சக்கரவர்த்தியைக் குறித்துச் சிறுமொழி விடுப்பாம்.

உலகத்திலுள்ள மன்னர் யாரினும் ஆங்கில மன்ன ரைப்போன்று மிகுந்த நாகரிகமுள்ளவர்களும், தனவந் தர்களும், நுண்ணறிவாளர்களும், ஊக்கமுடையவர்களும், காருண்யம் பொருந்தியவர்களும் வேறு இலர் என்பது யாவரும் ஒப்ப முடிந்த உண்மையே. அத்தகையாரின் ஆட்சியின் கீழ் நாம் எல்லோரும் மதுவையுண்டு களிக் கும் தேனீயைப் போன்று அவர்கள் இழைக்கும் நன்மை களைப் பகிர்ந்து உண்டு வாழ்தல் பூர்வ புண்ணிய வசமே யென்பர் அறிவுடையோர்.

உலகத்தில் ஐந்திலொரு பாகம் ஆங்கில மன்னரால் ஆளப்பட்டு வருகின்றது. ஆதலின், வேறு எந்த இராஜ் யத்தைக் காட்டிலும் ஆங்கில இராஜ்யமே மிகவும் விசா லித்ததாகும். சுருங்கக் கூறின்,

“திருவளர்ப் பதுமநாதன் தேசுறும் இடங்கள் தோறும்
உருவளர் அரசு தாங்கும் உத்தம குலத்தின் முன்னோர்”

என்றவாறு, சூரியன் அஸ்தமியா தேசத்தார் ஆங்கிலேயர் என்பது குன்றின் கண் இட்ட தீபம் போன்று இனிது பெறப்படுவதாம். செய்தொழின் முயற்சிகளிலும், வியா

பாரத்திலும், கடல்வன்மையிலும், இராஜரீகத்திலும், ஊக்கம், உழைப்பு, ஔதாரியம் முதலியவற்றிலும் சிறந்த இத்தகைய மாந்தர்கள், சுமார் 250 வருஷங்களுக்குமுன்,

"கரும்பொடு பெருஞ் செந்நெற் குலையுந்திக் கமலத்திற்
புள்ளெழுந்து புறம்பாயப் புனல்பாயக் கருமேதி
மன்னர்களுடன்பாய வயலின்மிசைக் கயல்பாயச்
சங்கீன்ற வெண்முத்துஞ் சலஞ்சலமும் பசும்பொன்னும்
அங்கங்கே யுழவர்களுக் களித்தினிது திரைக்கரத்தால்
எங்கெங்குஞ் சென்றெய்தி யிருமருங்கும் பொருதலைத்து
மங்கையர்கள் மனம் போன்று வருகலுழி நுரை சுமந்து
அறிவோர் பொருள் போன்றங் ககலிடத்திற் பொருள் பெருக்கி
நிறைவாகத் தெளித் தெங்கு நிரம்பித் தவவளம் பெருக்கி
யன்னது சூழ் பெருவள நாட்டளப் பரிய காட்சியது"

என்று சொலப்பெற்ற இப்பாதகண்டத்தின் பிரமிக்கத் தக்க செல்வச் சிறப்பினையும் இந்தியர்களின் கபடற்ற தனத்தையுங் கண்டு அவர்களுடன் பலபொருள்களில் வியாபாரஞ்செய்து வாராநிற்கையில், அப்போது இருந்த சுலுத்தான் மகமுது, கிஜினி மகமுது, கோர், தைமோர், மொகலாயர், யவனர், நாதர்ஷா, பாரஸீகர் முதலியவர்கள் இந்தியர் பலரைக் கொன்று, தேவாலயங்களை யழித்துக் குடிகளைச் சூறையாடுவதைக் கண்டு மனம் பொறாது தாங்களே அவர்களை எதிர்த்து விரட்டி ஓட்டி யழித்துப் பற்பல விடங்களில் மிக்க பலம் பொருந்திய கோட்டைகளைக் கட்டி இராணுவங்களை யணிவகுத்து நிறுத்தி இந்தியாவை அன்னிய சத்துருக்களால் அபாய மின்றிப் பாதுகாத்தனர்.

இந்தியாவிலுள்ள சிற்றரசர்கள், துருக்கர், சீக்கியர், கூர்க்கர், யவனர், மராட்டியர், இராஜபுத்திரர், பிண்டாரிகள், தங்களுக்குள் இருந்த விரோதத்தால் ஒருவரோடொருவர் போர் செய்தபடியே யிருந்தனர்; ஆதலால், எப்போதும் உதையும் கொலையும் கொள்ளையும் நாட்டில் மிகுவுற்றிருந்ததால் ஏழை எளியர் ஒரு நாளிலேனும் சுகஜீவியா யிருந்தாரில்லை. தற்போதோ, இந்தியாவின் உட்போர்கள் யாவும் நின்றுவிட்டன. இந்தியாவின் எந்த பாகத்தவனும் ஒரே தன்மையான சுதந்தரத்தைப் பெற்று இனிது வாழ்கின்றான். எங்கணும் ஒரேவித பிரமாணம்; ஒரேவித நீதி; ஒரேவித காவல்; ஒரே வித இராணுவம்.

பிரயாணிகளைப் போன்று தாங்களும் மாறுவேஷம் பூண்டு, வர்த்தகர்கள் பிரயாணிகள் முதலியவர்களுடன் சென்று நடுவழியில் அவர்கள் வாயில் துணிகளை வைத்து அடைத்துத் திணித்து அவர்களது பொருளைக் களவாடி, கிராமங்கள் தோறும் சென்று ஊரை நெருப்பிற் கிரையாக்கி யழித்த தீவர்த்திக் கள்வரை நமது காருண்ய ஆங்கிலேய கவர்மெண்டார் பிடித்துச் சிறையிட்டுத் தக்கவாறு தண்டித்து அத்தகைய பெருங்கொள்ளையையும் மாயத் திருட்டையும் நிறுத்தியதை எவரும் இனிது அறியாதிரார்.

ஏழை எளியன், கூன்குருடு, நொண்டி சப்பாணி, படித்தவன் படியாதவன், யாவரும் தமக்குரிய நன்னீதிகளைத் தற்காலத்தைப் போன்று முற்காலத்திலும் பெற்றதுண்டோ? தன் மனச் சாட்சிக்கு விரோதமாக ஒரு தனவான் ஒரு குற்றமுள்ள காரியத்தைச் செய்து விடு

வானாகில், பணப்பைகளை அக்காலத்து நீதியதிபதிகளுக்கு வாரியெடுத்துத் தருவதால் அவன்பால் நின்றது நியாயம். தற்போதோ, எந்த ஏழைக் கீழ்மகனும் ஒரே தன்மையான நிர்ப்பக்ஷமான நியாயத்தைப் பெறுகின்றான். அதன்பொருட்டு சட்டங்களும் நீதிஸ்தலங்களும் ஏற்பட்டிருக்கின்றன.

கொடும் வியாதிகளாகிய வைஸூரி, காலரா, ப்ளேக் முதலியவும் வேறு எந்த கொடிய ரோகங்களும் ஸூர்யனைக் கண்ட பனிபோன்று ஒழியும்படியாக அவ்வளவு அருமையான மருந்துகளை ஆங்கில துரைத்தனத்தார் தயார்செய்ததால் யாவரும் அவைகளை இலவசமாகப் பெற்று உண்டு இனிது வாழ நம் இந்தியாவில் வைத்திய சாலைகளும் இலவச வைத்தியமும் உலவி வருவதை யாவரும் உணர்வார்கள்.

ஆங்கிலேயர் இந்தியாவினுள் வந்தபோது எப்பக்கங்களிலும் ஒரு நல்ல தெருவாகிலும் இல்லை ; ஆறுகளைக் கடக்க மரப்பாலங்களே உபயோகிக்கப்பட்டன ; ஆதலின், ஒரு ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குப் போவதென்றால் ஆற்றுவெள்ளப் பெருக்காலும், திருடர்களினால் உண்டான பயத்தாலும், எங்கும் பரவியிருந்த மண்ணின் வெப்பக் கொடுமையாலும் ஜனங்கள் கொண்ட அவதிகள் எண்ணிறந்தனவாம். ஏழைகள் பாதசாரிகளாய் நாளெல்லாம் நடந்து இராத்திரியில் பயணத்தை நிறுத்துவர். தனவந்தர்களோ வெனின், குதிரைகள் மீதும், பல்லக்குகளிலும், தக்க காவலுடன் போவார்கள். பரிதாபமான நிலையில் இருந்த தெருக்களினூடே வண்டிகள் போதல்

அரிது. இவ்வித கொடுமைகள் யாவையும் சகித்து அவர்கள் போயினும் தங்கள் குறிப்பிட்ட இடத்தை யணுக நெடுநாட் செல்லும். புறப்பட்டவர்களுக்குள், மழையாலும், வெயிலாலும், பசியாலும் வருந்தி, காட்டு மிருகங்களின் கொடிய வாய்க்கு இரையாகாமலும் திருடர் கைவசத் தகப்படாமலும் பிரயாணஞ் செய்தவர் சொற்பரே யாவர்.

ஓரூரில் பஞ்ச முண்டாயின், அந்நிய ஊரிலிருந்து தனதான்யங்களைக் கொண்டுபோய்ச் சேர்த்தல் பகீரதப் பிரயத்தனமாம். தற்காலத்திலோ, ஆங்கில துரைத்தனத்தின் கிருபையால் எண்ணிறந்த சிறந்த அகன்ற வீதிகளும், ஒப்பற்ற பலமான பாலங்களும், எங்கும் பயமின்றிக் குறைந்த செலவில் அதிக தூரம் சொற்ப காலத்திற்குள் சுகமாய்ப் போக ரயில்பாதைகளும் அமைத்திருப்பது இராஜபக்தி மிகுந்துள்ள ஒவ்வொரு இந்தியனின் மனத்திலும் பசுமரத்தாணிபோல் பதிந்துநிற்கின்றது. மேலும், தற்காலத்திலே ஒரு காலணா அல்லது அரையணா செலவழித்தால் நமது எல்லா அந்தரங்க விஷயத்தையும், நம் இந்தியாவில் எந்த மூலையிலுள்ள எவனுக்கும் எழுதியனுப்பி அவனிடத்திலிருந்து எவ்விஷயத்தையும் எவ்வித சீமான்களையும் எளிதில் பெறலாகுமே. ஆயிரமைல் தூரத்திலுள்ள ஒருவனுக்காக, நம் ஊரிலுள்ள தபாலாபீஸில் எவ்வளவு மொத்த தொகையையும் கட்டித் தொலைந்து போனதில்லை ; எந்த முக்கிய சமாசாரத்தையும் அவனுக்குச் சிலமணி நேரங்களுக்குள் அறிவிக்கலாகும்.

அஞ்ஞான இருள் மூடப்பெற்றிருந்த நம் இந்தியருள் பலர் துஷ்டதேவதைகளுக்கு நரபலி கொடுத்ததும்,

கைம்பெண்கள் தத்தம் கணவருடன் தகனிக்கப்பட்டதும், பிறந்த பெண் சிசுக்களைக் * கொன்றுவருவதும் அடியோடு தடுக்கப்பட்டது ஆங்கில துரைத்தனத்தின் மாட்சிமையினாலன்றோ?

தேயிலை, காப்பி, நீலம், பருத்தி முதலியன தற்போது ஆங்கிலேயரின் முயற்சியால் இந்தியாவில் அதிகமாய்ப் பயிரிடப்படுகின்றன. சணல் வியாபாரம் மிக்குற்று விளங்குகின்றது. வருஷத்தில் சுமார் நூறு கோடி ரூபாய்கட்குமேல் இந்தியாவினின்று ஏற்றுமதியாகின்றது என்பதைக் கேட்க எல்லா இந்தியரும் மனம் மகிழாதிரார். ஏற்றுமதி எவ்வளவு பெருக்க மடைகின்றதோ, அவ்விதமே இறக்குமதியும் பெருக்க மடைவதால் பூலோகத்திலுள்ள எல்லாவித சாமான்களும் இங்கு கொண்டுவரப்பட்டு வர்த்தகம் செய்யப்படுகின்றபடியால், இந்தியாவை "பூலோகக் கடைவீதி" என்று வழங்க இடம் உண்டாகின்றது.

ஔரங்கசீப், திப்புசுல்தான் போன்ற கொடிய மகமதியர் ஹிந்துக்கள் யாவரையும் தம் மதத்தில் வலியசேர்ப்பதும், ஹிந்துப் பெண்டிரைத் தம் வசத் தடக்க முயலுதலும், "ஜஸியா" என்ற கொடிய வரிகளை அவர்களிடமிருந்து வசூலித்ததும் தற்போது ஒழிந்து எவனும் தான் விரும்பிய மதத்தை யனுசரிக்க இடம் உண்டாயிருப்பது விரும்பத்தக்கதன்றோ?

---

* இக்கொடிய வழக்கத்தை இராஜபுத்திரர் கையாடினர்; முதலில் பிறந்த பெண்பிள்ளை தேவதாசியாக்கப்பட்டது.

விவாகவரி, மதவரி, மரவரி, காலிவரி முதலிய அநியாய வரிகளை ஆங்கில துரைத்தனத்தார் நீக்கியதால் அவர் தம் காருண்யம் நன்கு விளக்கமுறுமே.

அவர்செய்த நன்மைகளைத் தொகுத்தே மாணவர் மனத்துள் பதிந்து நிற்பான் வேண்டித் தற்காலத்துப் புலவரொருவர்,

"திருவளர்ப் பதும நாதன் தேசுறு மிடங்க டோறும்
உருவள ராசு தாங்கு முத்தம குலத்தின் முன்னோர்
பொருவலி படைகள் பூண்டு பூதலத் துற்ற மாசு
வெருவிடப் போக்கிப் பாரோர் விழைதர ஆட்சி கொண்டு,

அன்னிய பகைஞ ராற்றல் அடக்கியுட் போர்கள் யாவுந்
துன்னிய வொளியின் முன்னர்ப் பனியெனத் துடைத்துக் கொள்ளை
மன்னிய களவும் போக்கி மதியிலர் கொள்கை தாமும்
பின்னிட நிறுத்திச் சட்டம் பிறங்கிட வைத்து மேன்மேல்,

மருத்துவ தான மெங்கும் வகையுற வமைத்துப் பாரின்
தெருத்தொறு மிருப்புப் பாதைத் தேரினை நடத்தும் வீதி
இருத்தித பாலின் சாலை யியங்குற நாட்டித் தந்திப்
பொருத்தியே வணிகம் பற்பல் பொலிவுற விருத்தி செய்து,

இந்திய தேயத் தாதி யேனைய மாந்தர் யாருந்
தந்தம மதத்தின் செய்கை தடையிலா தியற்றி நாளும்
சிந்தனை கலக்க மென்றுந் தீர்ந்திட வரிகள் எல்லாம்
நொந்தெமக் களித்திடாது நொய்யதாச் செய்தோ மென்றும,

நாட்டினிற் காய பற்பல் நலங்களை வகுத்து வாரி
கூட்டிடு வங்க மாதிக் குறையற விடுத்து மென்மேற்
கோட்டமில் குணத்தர் யாரும் குதுகலித் தினிது வாழத்
தாட் டிக வரசு வோம்புஞ் சதுர்மிகு தூய்மை மிக்கோர்."

எனச் சுருக்கமொடு கூறியுள்ளார்.

எல்லா இந்திய மக்களும் மேனாட்டுக் கல்வியில் நன்கு விளக்கமுற ப்ரிடிஷ் கவர்மெண்ட் எடுத்துக் கொண்ட ஊக்கம் மிகவும் மெச்சற்பாலது. அதனிலும், நமது காருண்ய சக்கரவர்த்தியான ஜ்யார்ஜ் மகிபர் இந்தியாவின் முன்னேற்ற விஷயமாகக் காரிய சித்திகளால் காட்டியுள்ள மதிப்பை எவ்விதம் எடுத்துரைப்பது? ஜ்யார்ஜ் மன்னன், கல்வி, கேள்வி, அறிவுடைமை, பொறையுடைமை, செங்கோன்மை, ஊக்கமுடைமை, ஆள்வினையுடைமை, கீர்த்தி, பிரதாபம், துஷ்ட நிக்ரகம், சிஷ்டபரிபாலனம் முதலியவற்றில் ஈடும் எடுப்பும் அற்றவர்; அப்புரவலன் 'நண்பினர்க்கு நல்லமுதும் பகைவர்க்குப் படுவிடமும் போன்றவன்; தண்ணளியால் தருமனையும், ஈகையினால் வருணனையும், வடிவழகால் மாரனையும் வென்றவன். அவன் கலைமகளுறைதரு நாவுடையான். மலர்மகளமரும் மார்புடையான். பாரும் விசும்பும் படர்ந்த பெரும்புகழான். திசையெலாஞ் சென்றுலவும் செங்கோலான். தண்டையுஞ் சதங்கையும் மயிற்பிச்சமு மணிந்து வட்ட மிட்டு நட்ட மிடும் வெண்புரவியும், புவியின்மே னடக்கும் புயலினம் போன்று, எண்டிசைக் கரிகளும் இணையல்லவெனத்தக்க திண்களிறும், கொடுமுடி யொத்த குடமும் அருவிகளொத்த கொடிகளுமுடைய குலகிரி போன்ற இரதமும், விடமொத்த சினமும் நிலைபெற்ற மனமும் விசையுற்ற நடையும் இடியொத்த குரலும் எழுவொத்த புயமும் மணலொத்த தொகையுங் கொண்ட அதிருங் கழற்காற் போர் வீரரும் என்ற நால்வகைப் படையும் தன தேவல்வழி நிற்கப் பெற்றோன். மற்றும், அவ்

வேந்தன் ஆடவர் பெண்மையை அவாவுந் தோளினன். மாற்றலர் கலக்கமெய்த முரசங் குமுறும் வாயிலான். மற்றைய வேந்தர்களுடைய மணி மகுடங்கள் உரிஞ்சுத லான் வயங்கிக் கதிரெறிக்கும் கழற்காலினன். வேற்றரசர் திறை கொணர்ந்து தலைப் பெய்து குடங்கையிற் றலைகிடத்திக் கிடந்துறங்கும் முற்றத்தான். அயர் வறு மீகையோ டறத்தினிலையன்; மயர்வுறும் வண்மையன்; மா பாக்கியன்; வியப்புறுந் திறனொடு வியக்கமா வனைவெலாம் பெற்ற நயனுடை நாயக நற்குணக் குன்று.

* " தாயொக்கு மன்பிற் றவமொக்கு நலம் பயப்பிற்
சேயொக்கு முன்னின்றொரு செல்கதியுய்க்கு நீரான்
நோயொக்கு மென்னின் மருந்தொக்கு நுடங்கு கேள்வி
ஆயப்புகுங்கால் அறிவொக்கு மெவர்க்கும் அன்னான் "

என்ற பெரியார்மொழி இந்த ஜ்யார்ஜ் மகிபனுக்கே நிதரிசனமாகக் கொள்ளற்பாலது. புகழும் வீரமும் பொருந்திப் பொருளிற் றக முயலுந் துரந்தரனுகிக் குணங்கள் மிகநின்ற இவ்வரும் மன்னன்,

" அறத்தறு தந்தை யென்கோ! யாருயிர் அமுத மென்கோ
திறத்துறு தவம தென்கோ! தேரரும் அருள தென்கோ!
புறத்துயிர் யாவும் பேணும் புண்ணியப் படிவ மென்கோ!
நிறத்துயர் முறைசெ யாட்சி நிறுத்துதற் காய தென்று

சந்திரன் வரவை நோக்குஞ்ச கோரமாம் பறவை போலும்
கந்தர வரவை நோக்குங் கான்முளைப் பயிர்கள் போலும்
நந்தலி லாவை நோக்கும் நாகிளங் கன்று போலும்
இந்திய மாந்தர் யாரும் எற்றிடக் கரங்கள் கூப்பி,

---

* கம்பராமாயணம்

வேண்டுவோர் வேண்டற் காகி மேதகை குணத்த தோடு
காண்டகு கருணை பொங்கிக் கடைக்கணித் தபயம் ஈய
ஈண்டு முன் வந்து தேய வியற்கையை யுணர்ந்த ஞான
ஆண்டவ னாகிப் பற்பல் அருங் குறை தீர்க்க வுன்னி,

கற்பினிற் கணியா யெங்கும் கவினுறு மேரி யம்மை
பொற்புறு நோன்பி னூற்றற் பொலிவுறப் பிறங்க மென்மேல்
அற்புறு புடவி நங்கை யளிகொள மடங்க லேற்றின்
நற்புக ழாதனத்தி னன்குவீற் றிருந்து மௌலி"

தரித்து 1911-ம் வருடி டிசம்பர் மாதம் 12உ யதினம் நம் மக்களின் மனத்தேர்ச்சியின் பொருட்டுத் தேனினும் இனிய மொழியில் திருவாய் மலர்ந்ததை உலகறியாதோ?

"என் முன்னோர்களால் உங்களுக்கு அளிக்கப்பட்ட உரிமைகளையும் சுதந்தரங்களையும் எப்போதும் நீதியுடன் பாது காப்பேனென்ற உறுதிமொழியும், உங்கள் க்ஷேமமும் சமா தானமுமே என் முக்கிய கவலையா யிருக்குமென்றும் நான் உங்க ளுக்கு நேரில் சொல்ல இச்சமயம் வாய்த்ததைப் பற்றி வெகு வாய் சந்தோஷிக்கின்றேன். கருணையுள்ள கடவுள் என் பிரஜை களைப் பராமரித்து, அவர்கள் க்ஷேமத்திற்காக நான் செய்ய வேண்டிய முயற்சிகளில் எனக் காதரவா யிருப்பாராக!"

என்ற அவரது நன்மொழியையும், மற்றோர் சமயத்தில் அச் சிங்கார மண்டபத்திலேயே தமதினிய குரலெடுத் துத் திரும்பவும்,

"மந்திராலோசனை சபையிலுள்ள நமது கவர்னர் ஜெனரலோடு ஆலோசனைசெய்து நமது மந்திரிகளின் அபிப் பிராயப்படி இந்தியா கவர்மெண்டின் இராஜஸ்தலம் கல்கத்தாவி லிருந்து பழைய தலை நகரமாகிய டெல்லிக்கு மாற்றுவதாய் நிச்சயஞ் செய்துவிட்டோம். இம் மாறுதலின் பயனை வங்கா ளம், ஒரிஸா, சோட்டா நாகப்பூர் ஒரு டிப்டி கவர்னருக்கு

அடியிலும், ஆஸாம் ஓர் சீப் கமிஷனருக்குள்ளும் அடங்கியிருக்கும். இந்த மாகாணங்களும் எல்லைகளும் இந்தியா மந்திரியின் சம்மதத்தின்பேரில் கவர்னர் ஜனரல் அவசியமானபடி யமைப்பார். இம் மாற்றங்களால் இந்தியா இப்போதைவிட நன்றாய் ஆளப்பட்டு, நமதன்புள்ள பிரஜைகளின் க்ஷேமத்தையும் சந்தோஷத்தையும் அதிகரிக்கவேண்டுமென்பதே நமது மனப்பூர்வமான விருப்பம்" என்று திருவுளம் பற்றியதையும் கேட்கும் நமக்கு, ஜ்யார்ஜ் மகிபர் எத்தகைய தயாள குணத்தார், நம்மீது எவ்வளவு அன்புடையார் என்பது நன்கு பெறப்படுவதன்றோ?

உலகத்திற்குக் கண்கள் மூன்று. ஒன்று சூரியன், ஒன்று கல்வி, ஒன்று அரசன். இம் மூன்று கண்களில் ஒன்று இல்லையாயினும் உலகம் நடவாது. கல்வியறிவோடு கூடிய அரசன் இரு கண்களோடு கூடியிருத்தலால் அவன் சூரியனிலும் அதிகம் ஆகின்றான். வெற்றி பொருந்திய வேலாயுதத்திற்குச் சமமான செங்கோலைக் கையிற்றரித்த அரசர்க்குச் சொல்லிய நற்குணங்கள் யாவும் ஒருங்கு திரண்டு அவதரித்த மூர்த்தியாகிய நம் ஜ்யார்ஜ் சக்கரவர்த்தி, 1912-ம் வருஷம் ஜனவரி மாதம் 6உ கல்கத்தா சர்வ கலாசாலையில் வெளியிட்ட அருமொழிகள் கல்வி சம்பந்தமாகலான் இந்தியர் யாவரும் கவனிக்கத் தக்கனவேயாம்.

"இந்தியாவின் உயர்தரப் படிப்பில் நான் எடுத்துக் கொள்ளும் கவலையை உங்களுக்குத் தெரியப்படுத்த எனக்குச் சமயம் வாய்த்ததால் மிக்க சந்தோஷம். இந்தியருக்கும் ஆங்கிலேயருக்கும் ஒற்றுமையிருப்பது இந்தியாவின் க்ஷேமத்துக்கு இன்றியமையாத பெரிய ஆதார

மாகும். இவ் வொற்றுமையை இந்திய சர்வ கலாசாலை களே நாளுக்குநாள் அபிவிர்த்தி செய்ய வேண்டு மென்று நான் கோருகிறேன். தத்துவ சாஸ்திரம், கைத்தொழில், முக்கிய படிப்புகளுக் கேற்ற சாதனங்களும், மாணுக்கர் சுய ஆராய்ச்சி செய்யத்தக்க சமயங்களும் அமையா விடில் தற்காலத்து சர்வகலாசாலை பூர்த்தியாகாது. உங்கள் பழமையான சாஸ்திரங்களைப் பெருமையாய்க் காப்பாற்றி மேல்நாட்டு நூதன சாஸ்திரங்களும் இந் நாட்டில் அபிவிர்த்திச் செய்யவேண்டியது உங்கள் கடமை. கல்வியுடன் நற்குணமும் மாணுக்கரிடம் பதியச் செய்ய வேண்டியது உங்களுடைய முதன்மையான பொறுப்பா யிருக்கட்டும். குணமற்ற கல்வி யாது பயன்படும்? இந்தி யாவின் எப்பக்கத்திலும் பழயன கழிந்து புதியன தோன்றுவது மெச்சத்தக்கதே. கல்வியே உங்களிடம் இவ்விதம் மாற்றம் உண்டாக்கி நம்பிக்கையைத் தூண்டு கிறது. இன்னும் உயர்தரக் கல்வியபிவிர்த்தியினுல் உங் கள் நம்பிக்கை முன்னிலும் உறுதியடைந்து உங்களுக்கு உற்சாகம் கொடுக்கும். ஆகையால் நம்பிக்கையாயிருங் கள். இந்தியாமுற்றிலும் கல்விச்சாலைகள் நிரம்பி இராஜ விசுவாசமும் தேசபக்தியும் நிறைந்த பிரஜைகள் அதிக ரித்து அவர்கள் வியாபாரம், வேளாண்மை, கைத்தொழில் முதலியவற்றில் மேல் நாட்டாரைப்போலவே விர்த்தி யடைய வேண்டுமென்பதே என் அளவற்ற ஆவல். இந் தியர் வீடுகளில் சந்தோஷமும் செழிப்பும் சமாதானமும் விளங்க ஆசிக்கிறேன். கல்வியே இவற்றிற்கெல்லாம் அஸ்திவாரமாகிறபடியால் இந்தியரின் கல்வி யபிவிர்த் தியே என் கவலைகளில் முக்கிய கவலையாயிருக்கும்'.

எங்கும் புகழ் எட்வர்ட்டின் புதல்வரான ஜ்யார்ஜ் மகிபர் எவர்க்கும் குறைசெய்யாதான்; பொங்கும் தயை குணசீலன்; நல்ல அலெக்சாந்திரி பாலன்; அழகி மேரி யின் அன்பன்; பழகும் பலகலை கற்றோன்; பேர்பெற்ற விக்டோரியாவின்பேரன்; பொன்முடி தரித்த புண்ணி யன்; சீர்பெற்ற இங்கிலாந்தின் அரசன்; உலகத்தைங் தொரு பாகமதை உரிமையாட்சி செய்திரன்; கலக மணு காமல் காக்கும் அரும்பெருங் காவலன்; சூரியன் அஸ்த மியா தேசத்தான்; அதைச் சுற்றிப் பார்த்துவந்த சுகு ணன்; பிரியமாய்க் குடிகளைப் பார்க்கும் பெருமான். ஆசையாய்க் கல்வி யபிவிர்த்திக் கவன் ஐம்பது லக்ஷம் ரூபாய் அளித்தான். விக்டோரியா க்ராஸ் பட்டமதை இந்தியர்க் கினி கொடுக்கலாமென இன்பமாய்ச் சொன்ன வன். தர்பார் நடந்த டில்லிப் பட்டினத்தைத் தலை நக ராக்கித் தந்தான். சர்க்கார் வேலையில் சம்பளம் குறைந் தவருக்கு அவன் சன்மானம் கொடுத்தான். வங்காள மாகாண பிரிவினையால் வந்த வம்புகளை நீக்கி வங்காள மாகாண மொன்றாக்கினான்; கைதிகளில் நல்லவரான வர்க்குக் கருணையாய் விடுதலை செய்தான். அத்தகைய மேதகை குணத்தான் மணியின்கண் ஒளியும், மலரின்கண் மணமும், சொல்லின்கட் பொருளும், உடலின்கண் உயி ரும் போல நின்று, வானம் வழங்கவும், வையம் வளஞ் சுரங்கவும், தானந் தழைக்கவும், தவம் வளரவும், புல் வாயும் புலிப்போத்தும், பருந்தும் பைங்கிளியும் ஒரு வழியோடி ஒத்து வாழவும், கரி பரி தேர் காலாள் என் னும் படையாலும், தனது நிலையாலும், அருளாலும், பெயராலும் பகையை யடக்கிப் பார்காத்து வருவானாக!

श्रीसदाशिवब्रह्मेन्द्रकृतिषु

# शिवमानसिकपूजा

# कीर्तनानि

# आत्मविद्याविलासः

इत्येतत्त्रयं आङ्गलानुवादद्राविडानुवादसहितं श्रीपरमहंस-
परिव्राजकाचार्य श्रीकाञ्ची कामकोटिपीठाधिप
जगद्गुरु श्रीचन्द्रशेखरेन्द्रसरस्वती
श्रीपादानां श्रीमुखेन
समुद्भासितम्

श्रीकामकोटिर्विजयते



[ तृतीयं संस्करणम् ]

श्रीकामकोटि कोशस्थानेन प्रकाशितम्
४, फ्रानसिस् जोसफ् वीथी, मदरास् १



स्वाम्यं कोशस्थानस्यैव ]     1951     [ मूल्यम् पञ्चदश आणकाः

ஸ்ரீ

ஸ்ரீ சந்த்ர மௌளீச்வராய நம :

ஸ்ரீ ஸதாசிவேந்த்ர ப்ரஹ்மம் அருளிய

# சிவமானஸிக பூஜா

# கீர்த்தனங்கள் ...

# ஆத்மவித்யாவிலாஸ

என்னும் ஸம்ஸ்க்ருத நூல்களும்

ஸ்ரீ வே. நாராயணன், எம். ஏ., எம். எல்.

செய்த தமிழ் ஆங்கில அனுவாதங்களும்

திருவாங்கூர் ஸம்ஸ்தானம் தலைமை நீதிபதி, திருப்புகழ்மணி

ஸ்ரீ T. M. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்கள்

எழுதிய முகவுரையுடனும்

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய

ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சீகாமகோடி பீடாதிபதிகளான

ஸ்ரீசந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

அருளிய திவ்ய ஸ்ரீமுகத்துடனும்

(மூன்றும் பதிப்பு)

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்

4 பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை

பதிப்புரிமை] 1951 [விலை அணா. 15

# FOREWORD

BY

T. M. KRISHNASWAMY AIYAR, B.A., B.L.
*Chief Judge, High Court, Trivandrum.*

To be privileged to say a foreword to the second edition of the works of Sri Sadasiva Brahmendra is a great honour. A great Siddhar wrote:

*பார்த்து நின்றதம்பலம் பரமனுமெம்பலம்*
*கூத்து நின்றதம்பலம் கோரமானதம்பலம்*
*வார்த்தையானதம்பலம் வன்னியானதம்பலம்*
*சீற்றமான தம்பலம் தெளிந்ததேசிவாயமே.*

The dance of the Lord is carried on without interruption all over and everything that strikes the eye, the ear or the sense is a stage in which the dance of Sri Nataraja can be seen. There are stages and stages in the world where this dance is going on and there are stages where his dance is more easily discovered than in other stages. The sense of the spoken word is of the Lord. The dance of the Lord can be discovered in that sense. Great men who have realised the absolute have erected many stages of words and song but none can surpass the simple beauty of the words of the great Sadasiva Brahmendra nor the dancing sense of Sri Nataraja in them. The dancer, the dance and the stage seem to get into one unified harmony in the words of Sri Sadasiva Brahmendra.

I appreciate in all delight the second edition of this work and I hope it will run to many more editions.

The demand for further editions of this work will in one sense be a true measure of the spread of the highest culture amongst the citizens of our land. As Sri Sadasiva Brahmendra transcended the limitations of his body in the realisation of the absolute, his realisations have transcended the limitations of the spoken word and the music of sounds. These works constitute the universal asset of one and all and it can only be by such publications as these that the undying asset of each man can ever be restored to him. The joy of self-knowledge and ecstasy of self-realisation will be his who cares for the permanent values of life. The translations in Tamil and English are particularly apposite to the universality of the instruction and gnana to be gained by the careful study of these works. The foreword that I would fain give to this edition will only be the prayerful expression of my heart's desire that the illumination of Sri Sadasiva Brahmendra may overwhelm me and the host of others and make us realise the true joy of undifferentiated love. May the encouragement of His Holiness Sri Sankaracharya Swamigal of Sri Kanchi Kamakoti Pitha to this publication be fruitful here in the same large measure as elsewhere.

*12th March, 1944*
TRIVANDRUM

T. M. KRISHNASWAMI AIYAR

